






# ஸச்சிதாநந்தவிளக்கம்



அல்லது

# ஆத்மப்பிரத்யக்ஷம்




ஸ்வாமி - ஸச்சிதாநந்தா

உ

ஓம் தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம:

# ஸச்சிதாநந்த விளக்கம்

## அல்லது

# ஆத்மப் பிரத்தியக்ஷம்.

---

இது

சென்னை திருவேட்டீச்வரன் பேட்டை

ஸ்ரீ ஸச்சிதாநந்த சங்கத்தின் ஸ்தாபகராகிய

**ஸ்ரீ ஸச்சிதாநந்த சுவாமிகளால்**

ஆங்கிலத்தில் இயற்றப்பட்டு,

---

செய்யாறு தாலூக்கா பொதியர்பாளையம்

ஸ்ரீ ஸமரஸ ஸன்மார்க்க ஸங்க அக்ராஸனர்

**பிரஹ்மஸ்ரீ. அருட்கவி, ந. சுப்பிரமணிய அய்யர்**

அவர்களால், தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

---

சென்னை கோமளேச்வரன் பேட்டை

ஸ்ரீமான் T. N. கோவிந்தராஜ முதலியார் அவர்களால்

பிரசுரம் செய்யப்பட்டது.

---

 1925. 

# அர்ப்பணம்.

இச்சிறு நூல்,

ஸத்து, சித்து, ஆநந்த ஆத்மப்பிரத்தியக்ஷ மஹாவாக்ய உபதேஷ்டாவாகிய ஸற்குருசரணா விந்தங்களுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது.

# முகவுரை.

இச்சிறுநூல் ஸ்வபாவ ஸத்தையாகிய ஆத்ம அபரோக்ஷத்தின்பொருட்டு முயலும் அப்பியாஸியின் அநுஸந்தான ரூப விருத்திப்பிரவாகத்தின் பெருக்கேயாவதுடன், இந்நூலாசிரியர் தமது ஸ்வாநுபவஸமாதியில் உணர்ந்தவற்றின் குறிப்புமாகும். ஆதலின் இந்நூல் முற்றும், ஒருவன் தன்மனத்தோடு ஸம்பாஷிக்கும் ரூபமாகவே யிருக்கின்றது; வாசகர்களுக்கோருபதேசமென நினைத்தல் தகுதியன்று. இந்நூலின் ஒவ்வொருவரியிலும் தன்மயத்துவம் ததும்பியிருக்கின்றது. இந்நூல், விஷயத்தொடர்ச்சியற்று விளங்கினும், சாந்த விருத்திகளுக்கு மிகவும் அநுகூலமானதென்று உறுதியாய்க் கூறலாம். இந்திரியாதிகளால் ஆவரிக்கப்பட்டு விபரீதமாய் விளங்கும் ஆத்மதத்துவத்தை, இந்நூலாசிரியர், யாவருக்கும் சந்தேக விபரீதங்களற உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காட்ட முயன்றிருப்பதை இது நன்கு விளக்குகின்றது. சிந்தையும், மொழியும் செல்லா நிலைமைத்தாகிய ஆத்மஸ்வரூபத்தை வைகரீ வாக்கினல் எங்ஙனம் மொழியலாம்? பௌதிக மனத்தால் எங்ஙனம் நினைக்கலாம்? முடியாத காரியமேயாயினும் அபயஸ்வரூப மோக்ஷத்தை விரும்பும் ஒவ்வொரு முமுக்ஷுவுக்கும் வாக்ரூபமான சாஸ்திரங்கள் வேண்டியனவேயாகும். இன்றேல் அநுஸந்தானஞ் செய்தல் கூடாததாகும். ஆதலின் ஆத்மாநுஸந்தானஞ் செய்யும் ஸகல அப்பியாசிகளுக்கும் இந்நூல் ஒரு சிறந்த உபகாரியா யிருக்குமென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

ஆத்மாபரோக்ஷப் பிரவிருத்தியில் இந்நூலாசிரியர்க்கு ஸகல அநுகூலங்களும் உண்டாகுக.

"ஸன்மார்கத்தில் நடப்பவர்க்கு மங்களமாகுக"

இங்ஙனம்,
ஶர்வாநந்தா.
அக்கிராஸனர்,
ஸ்ரீராமகிருஷ்ணமடம், மயிலை.

சென்னை

ஆநந்தாஶ்ரம சாதுமஹா சங்கம்

## ஸ்ரீவீரசுப்பையஞான தேசிகேந்திரசுவாமிகளால்

இயற்றப்பட்ட

சாற்றுக்கவி.

உண்மையறி வாநந்த வொருபொருளை யுரைக்கும்
உபநிடதப் பொருள்கடமை யுருவகமாய்த் திரட்டி
திண்மையறி வெவருமுற வாங்கிலபா ஷையிலும்,
செந்தமிழா மமுதினிலுந் தேவவுணர் வெனவே
*உண்மையற வுரைத்தனன்மெய் யுணர்வுசுகப் பெயரா
முயர்முனிவன் றன்பெயரா லோங்கிடுநற் சபையால்,
வண்மையறங் கருணையன்பு மைத்திரியாங் குணங்கள்
வளர்ஞான முதலவருள் வான்றனிமா தவனே.

---

## ஆசிரியர், ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் இயற்றிய

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

தன்னளவைப் பன்னூலாற் சற்குருவாற் றகவுணர்ந்து
தானே தானாய்
மன்னியசுட் பிரமணியப் பிரமவித்திங் காங்கிலத்தின்
மன்னி நின்ற
பின்னமறு நற்சச்சிதாநந்த விளக்கநூல்
பெரியோ ரேத்த
நன்னயமெ லாந்தோன்ற மொழிபெயர்த்தா
னதன்சீர்யார் நவில்வார் மாதோ.

---

* உள் † மை=அஞ்ஞானம். அற=நீங்க.

உ

ஓம்

தத்ஸத்.




# ஸச்சிதானந்த விளக்கம்

அல்லது

# ஆத்மப்பிரத்தியக்ஷம்.

எவ்வகைப் பிறப்புக்களிலும் மானிடப்பிறப்பு மேன்மையும் அருமையும் உற்றது. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும். இந்த மனிதப்பிறவியிலேயே ஆத்மலாபத்தைப் பெருவிடின் வாழ்நாள் வீணுளாகும். இதனுண்மையைக்கண்ட சிலரே, "எதனை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்தவராவரோ அத்தகைய பரம்பொருள் வடிவ தங்கள் ஆத்ம ஸ்வரூபத்தை" அறிய முயன்று, நினைப்பு, மொழி, செய்கைகளைச் சதா ஜீவப்பிரஹ்மைக்கிய அநுஸந்தானத்தின் கண்ணேயே நிலை நிறுத்தி ஸ்வாத்மாநந்தத்திலேயே அபேதமாய் நிற்க நினைக்கின்றவராவர். இவ்வாத்மாநந்த நிலையானது, தேச, கால, வஸ்து பரிச்சேதங்களுக்கு அதீதமாய், நாமரூபப் பிரபஞ்ச சம்பந்தமான சகல, வாசனைகளும் நீங்கப்

பெற்றதாய் இருப்பதுடன் தூய்மையாக்கப்பட்டிருக்கிறஅந்தர் முகமனத்தினுல் அறியத்தக்கதாயு முள்ளதாகும். இந்தஜன்மத் திலேயே நவத்வார புரமாகிய சரீரத்திலுள்ள ஆத்மபுருஷனை யறிந்து "நானே பிரஹ்ம"மென ஸாக்ஷாத்கரித்தல் வேண்டும், பிரகிருதியின் வசமாய் உள்ள தூக்கத்தினின்றும் ஆத்ம ஸ்வ ரூபத்தில் விழிப்படையவேண்டும். இங்ஙனம் அடையா மல் இம்மனிதப் பிறப்பை வீணுக்கிக் கொள்வோமேயானுல் நாம் நமது பிறப்புரிமையாகிய ஸ்வேச்சையை அறவே கை விட்டு, மறுபடியும் நமக்கு ஏற்படும் பிறப்பு இன்னதென அறி யாதவர்களாய் எங்கித்திகைக்கநேரிடும். ஆகையால் நாம் மாயா வசத்தர்களாகாமலும் அதன் சக்தியாகிய ஆவரணத்தால் மறைக்கப்படாமலும் நமது சுய வடிவமாயுள்ள ஸத்து, சித்து ஆநந்தக்கடலை யுணர்வோமாக. இதுதான் ஸகல மதவாழ்க் கையின் முடிவான சித்தாந்தமாம். இந்நிலையில்தான், கீதை யில் பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா திருவாய் மலர்ந்தரு ளிய வண்ணம் "நானே எங்குமாய், என்றுமாய் எல்லா மாயுமுள்ள ஆதியந்தரஹித பரம் பொருள்" என்றும், "நானும் பரலோகத்திலுள்ள என் பிதாவும் ஒன்றே" யென்று ஏசுநாதர் கூறியவாறும் "அனலக்" (நானே கடவுள்) என்று மகமத் கூறியவாறும், "ஸோஹம்" "அதுவே நான்" என்று அனேக வைதிகரிஷிகள் அநுசந்தானம் செய்தவா றும், "பிரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யா ஜீவோபிரஹ்மைவ நாஅபர:— பிரம்மமே யுள்ளது. (காணப்படும்) இச்சகம் (கயிற்றரவுபோல்) மித்தையே; ஜீவன் பிரஹ்மமே மற் றன்று" என்று ஸ்ரீ பகவத் பாத சங்கராசாரியார் அதிதைரிய மாய் இடிமுழக்கம்போல் திருவாய் மலர்ந்தருளியவாறும், சந் தேகவிபரீதங்களற அபரோக்ஷமாய் உணர்தல் கூடும்.

## சிரவண, மனன, நிதித்யாஸனங்கள்.

"ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்ய: மந்தவ்ய: நிதித்யாஸிதவ்ய:-'ஆத்மாவேஅறியத்தக்கது கேட்கத்தக்கது. தியானிக்கத்தக்கது. உணரத்தக்கது" என்றும், அஹமேவ தத்-நானே அதுவென்றும் சுருதிகள் கோஷிக்கின்றன.

"நானே பிரஹ்மமாயிருக்கிறே"னென்னும் மஹா வாக்கியந்தான் அத்யாத்ம வித்தையாகிய ஏணியின் உயர்ந்தபடியாகும். இவ்வாக்கியார்த்த ஞானந்தான் ஆத்மப்பிரகாசத்தின் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரமாகும்.

இங்ஙனம், தன்னைத்தானறிந்து வியாபகமாய் விளங்காமல் தீனத் தன்மைபொருந்திய பந்த (கட்டுப்பட்ட) ஜீவனாய் இருக்க ஒருகாலும் எண்ணுதல் கூடாது. இரவும் பகலும் அதீதப்பிரஜ்ஞையின் ஸத்பாவத்தை யுணர்க. இவ்வுணர்ச்சியின் பொருட்டு, தேகம், இந்திரியங்கள் அந்தக்கரணமாகிய உபாதிகளை யறவே ஒழித்தல் வேண்டும். ஸ்வயம் பிரகாசமாகிய எல்லையற்ற ஆத்மக்கடலில் ஒரு சிறு குமிழியைவிட அற்பமான பரிச்சின்ன தேக பாவனையைக் களைந்து அகண்டாத்ம பாவனையாகிய ஜோதியை ஏற்றுக.

மனம் ஆத்ம ஸ்வரூபத்தில் ஸ்திரமாய் அழுந்தி, ஸ்வரூபநாசமாய், நாமரூபப்பிரபஞ்ச ஸகல வாஸனைகளும் மறும் வரையில், (நெடுநாள்) இடைவிடாது சிரத்தையுடன் ஆத்மாநுஸந்தானம் செய்க. மதுவுண்ட வண்டைப்போல், அநவரதமும் மனமானது பிரஹ்மாநந்த லஹரியைப்பானம் செய்து சொக்கி லயப்பட்டு பிரஹ்மாகாரமாகுக. இங்ஙனம் செய்வது தான், நாமரூப உலக நாட்டத்தை யொழித்து அஸ்தி, பாதி, பிரியவடிவ பிரஹ்ம நாட்டத்தைப் பெறுதற்குச்சாதனமாம். இத்தகைய அகண்டாகார விருத்தியை அடைய அநுகூலமாய் உள்ளவை மனோவாக்குக் காயங்களின் ஒற்றுமைப்பட்ட ஒழுக்கமும், சம்ஸார சுகத்தின் உண்மையென்ன? என்னும் ஆழ்ந்த விசாரணையுமேயாகும். இவ்விசாரணையென்னும் தவமே ஒவ்வொரு க்ஷணத்திலும் ஜீவத்தன்மையை ஸ்புடஞ் செய்து மாற்றும் ஏகவிஜ்ஞான ரூப அக்னியாகும். இங்ஙனம் மேற்கூறிய ஸாதனங்களனைத்தையும் பெற்று உபசாந்த சித்தமுடையவனாய், கேவலம் அநுபவைகவேத்யமாயுள்ள நிரதிசய ஆநந்தமும் நிரங்குச திருப்தியும் முகத்திலும் நன்கு விளங்குமாறு செய்க. ஜீவபாவம் கரைந்து பரிபூர்ண வடிவத்தையடைக. பிறருக்கு உபதேசிக்கும் வண்ணம் ஒழு

க்காட்டுக. அநிருத, ஜட, துக்கரூப உலகத்தின் பேதவடிவ பந்தத்தை யொழிப்பதே ஆத்ம ஞான மாகும்.

இத்தகைய உயரியதோர் ஆத்ம ஸாக்ஷாத்கார தத்துவ முடையவனாய், எல்லாம் அற்ற நிலையில் பொங்கியெழுவதாயும் அவிச்சின்னமாயும், அவிநாசியாயுமுள்ள ஆத்மாநந்த வெள் ளத்தைப்பெருக்குக. எந்த க்ஷணத்தில் அனாத்ம ஜடபாவனை யொழிகிறதோ அந்த நிமிஷமே உன்னுடைய ஸ்வரூப மோக்ஷ ஸாதன ஸமாதிநிலை வெளியாகும். இந்த அஜட (சித்து)பாவனா ரூப ஸமாதிதான் அழிவற்ற ஆத்ம ஸ்வரூ பத்தில் விழிக்கச் செய்வதாகும்.

ஆதலின் அநாத்மாகார உலக எண்ணங்களைப் பிரயத்த னஞ்செய்து ஒழித்து, ஸதா ஆத்மாநு ஸந்தானம் செய்வதில் ஜாக்கிரதையுள்ளவனாய் இருக்கவேண்டும். இத்தகைய ஸ்வா த்ம மஹிமையின் சாஸ்திரஜ்ஞானம், அநுபவமாய் இருக் கும்படி செய்க. அநுபவமற்ற கேவல சாஸ்திர ஞானம் பதருபோன்றதாகும்; அநுபவத்தோடு கூடிய சாஸ்திர ஞானம் வாஸனையோடு கூடிய பொன்மலர் போன்றதாகும்.

உன்னுடைய ஒவ்வொரு கர்மத்திலும் வேதாந்தத்தின் அபேத தத்துவமானது உணர்வுடன் ஆசரிக்கப்பட்டு வரு தல் வேண்டும். எட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது. உன் னிடத்தில் அநுத்பூதமாயுள்ள ஸத்தையை ஸ்புரிக்கச்செய். நாமரூபப் பிரபஞ்ச அத்தியாஸத்துக்கு அதிஷ்டானமாயுள்ள தும், எங்கும் அந்தர்யாமியாயுமுள்ளதுவுமான ஸத்தையை எப்பொழுதும் பார். அப்பொழுது தான் பரிபூர்ண நிலையை அடைவாய். ஸகல அத்தியாசங்களுமற்ற பிரஹ்மாநந்த நிர் வாண நிலையின் கண்ணேயே நிலைபெற்றிருக்க நீ ஸதா விரும்பு வாயாக. அத்தியாச நீக்கமே அதிஷ்டான அபரோக்ஷம், அநர்த்த நிவர்த்தியே ஆநந்தப்பிராப்தி. இந்த தத்துவத்தை ஸமாதியில்தான், உணர முடியும்; தர்க்கத்தினாலும் யுக்தி யினாலும் அன்று. "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் அப ரோக்ஷ ஞானம் திடமாய் உண்டாய காலத்தில் சுவர்க்க நர

கங்களும், தீர்க்க ஸ்வப்னமாகிய இந்த உலக அனுபவமும் கயிற்றில் அரவுபோலக்கெடும். ஸத்தா ஸ்வரூபமாகிய கடலில் காணப்படும் இந்த உலகம், வெடித்து ஸ்வரூப நாசமாதற்குத் தயாராய் உள்ள ஒரு சிறு நீர்க்குமிழிபோன்றது; ஆனால் உன்னுடைய ஸ்வரூபமோ எப்பொழுதும் அழியத்தக்கதன்று.

**லௌ**கிகபரிச்சின்னங்களற்றமனோகரமான துரியாதீதமெனும் உபசாந்த நிலையில் செல்க. இந்நிலைதான் இராப்பகலற்றவிடம்; இதுதான் நிர்த்தொந்துவ நிலை; ஸகல விஷயங்களின் பற்றற்ற விடம் இதுவே. இதுதான் நாமரூபங்கள் நாசமாகும் மயானம்; இதில் விளங்கும் பொருள் என்றும் உள்ள நீயே. பிரத்தியக்காய் (உள்ளே) உள்ள ஸதாநந்த ஸ்வரூபத்தை உன்னுடைய இயற்கை(ஸத்துவ) குணத்தினால் அறிந்து அநுஸந்தானம் செய்ய முயல்க; முயன்றால் அத்விதீய ஏகரஸத்தைத் தடையின்றி அறிவாய்.

உன்னுடையவாழ்நாள் முழுமையும் ஆத்மலாப,முயற்சியிலேயே செல்க. ஸ்வபாவமாயுள்ள உன்னுடைய உண்மை நிலையோடு உன்மனம் ஒற்றுமைப்பட்டுப் பரிசுத்தமாகுக. ஆத்ம ஸாக்ஷாத்காரம் போலவே விளங்கும் ரஸா ஸ்வாதத்தில் மயங்காமல், உண்மையான ஸமாதியில் பழகு. ஆத்மாவின்மேல் கற்பிக்கப்பட்ட ஆரோபமும், மனத்தின் பிரமையும், ஜகத்தின் இந்திரஜாலமும் அற்றொழியும்படி ஆத்மஸ்வரூபத்தை அணுகு. "அவன், அவள், அது" வென்னும் ஸகலபேத நாட்டத்தை யொழித்து அபேத நாட்டத்தைக் கடைப்பிடி; தானலாத உடம்பைத் தானென்பதனால் தான் ஜனனமரண அநர்த்தம் உண்டாகின்றது. எந்த க்ஷணத்தில் ஸர்வ வியாபகமான ஆத்மாவை, மயக்கத்தினால், பரிச்சின்னப்பட்டதாகக் கருதுகின்றனையோ, அந்த க்ஷணத்திலேயே உனக்குக் கேடுண்டாயது; எந்த காலத்தில் வியாபகமான பரம்பொருளே நான் என்று "அபேதப்படுகின்றாயோ, அப்பொழுதே ஸ்வேச்சையை அடைகின்றாய்: கட்டுப்பட்டவனென்று நினைத்தால் கட்டுப்பட்டவனே. பந்த மோக்ஷ

களுக்கு மனமே காரணம். ஆதலின் ஸத்ஸ்வரூப நிர்க்குண ஆத்மாவை அடையச் சீக்கிரம் முயல்க. முயன்று அநவரதமும், தன் மஹிமையிலேயே ஸ்வயம் பிரகாசமாய் விளங்கும் ஆத்மாநு ஸந்தானத்திலேயெ இருத்தல் வேண்டும்.

நான், நீ, அவன், அவள், அது வென்று இங்கே காணப்படும் பேதவுணர்ச்சிகள் யாவும் அநாதியாய்த் தொடர்ந்து வரும் போக்த்ரு போக்கிய சம்பந்தத்தினுலுண்டானவையேயாகும். இவையாவும் அத்தியாசமே. இவற்றிற்கு அதிஷ்டானமாகிய நிர்விகார அஸங்க சுத்த ஆத்மா, ஸதா பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. கர்த்ருத்வ, போக்த்ருத்வங்களை ஆத்மாவின்மேல் எற்றுதே. அவை உன்னுடைய கற்பனையாதலால் உடனே ஒழிப்பாயாக. "எனது" "உனது" என்பன சொன்மாத்திரமேயாகும், உன்னை நீ சந்தேக விபரீதங்களற அறிகிற வரையில், தேச, கால, நிமித்தாதி ஸகல அநர்த்தங்களிலிருந்து விடுபடுதல் என்பது கிடையாது ; மற்றுே சுக துக்காதிகளாலும், விருப்பு வெறுப்புக்களாலும், ஸ்துதி, நிந்தைகளாலும், உன் மனமானது மொத்துண்டு அலைந்துழன்று கொண்டே யிருக்கும். மனஸ்தத்துவத்தில் அமைந்துள்ள பரஸ்பரவிருத்த பிரவிருத்தி நிவிருத்திகளால் முறையே பந்தமும் மோக்ஷமும் உண்டாகின்றன. மோக்ஷ காரணமாகிய நிவர்த்தி தத்துவத்தைக் கடைப்பிடித்து தேகயாத்திரை நடத்து வதே ஸர்வஸங்க பரித்தியாக ஸந்நியாசமாகும்.

தஹராகாசத்தில் (புத்தியாகிற குகையில்) பிரகாசிக்கும் ஆத்மஸ்வரூபத்தை யறிக. ஹிருதயபுண்டரீக சிதாகாசத்தில் ஆத்மாவைத் தரிசிப்பதாவது ஸகல நாமரூப அத்தியாச நீக்கத்திலேயேயாம். வியஷ்டி பேதத்தை நீக்கி அதீதமாயுள்ள அகண்ட பாவனையைச் செய்க. வியஷ்டி பேதத்தை (கண்டபாவனையை) விடுவதனுல் எல்லாமாயும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் விளங்கும் பரமமேன்மையான நிலையை யடைவாய். கற்பித ஜீவபாவனையால் விளைந்த பந்தமானது இனி உன்னை வருத்தாது. அபரோக்ஷாநுபூதியில் விளங்கும்

அகண்டானந்த ஜோதியைப்பாராமல் பார்ப்பாய். இங்ஙனமன்றி உலக ஆசைகளால் விழுங்கப்பட்டு நிற்கின் சுழற்காற்றில் சிக்கிய சிறு துரும்புபோல் வருந்துவாய். ஆதலின் பஞ்சகோசங்களுக்கு அடிமையாகாமல், ஸ்வபாவ நித்திய ஸித்த ஸிம்ஹாஸனத்தின்மேல் அமர்ந்து ஸ்வாராஜ்யத்தைப் பெறுவாயாக. "ஏகமேவ அத்விதீயம் பிரஹ்ம" மென்று அபரோக்ஷமாயறிந்து ஆத்ம ஸ்வேச்சையைப்பற்றிப் பாமரர்களும் நன்கறியும்படி தம்பட்டமடிக்க.

நீர்க்குமிழி போன்ற வியஷ்டி ஜீவபாவமானது அகண்டமாகிய கடலில் அழிந்து அதன் வடிவமாகுக. ஸர்வோத்கிருஷ்டமாகிய அந்த அகண்ட சமுத்திரத்தின் சிறு அலைகளே ஸர்வமும் ஆம். இக்கடலைத்தரிசி. உன் மனமானது நித்தியாநந்தக்கடலில் திளைக்க அதனால் உண்டாகும் நிரங்குசத்திருப்தியும் நிரதிசயாநந்தமும் உன் முகத்தில் விளங்கட்டும்.

லௌகிக மனோவிருத்திகளின் மெய்ப்பாடுகள்விளங்காமல், பரிபூர்ண ஆத்மநிஷ்டையின் ஸஹஜநிலை முகத்தில் விளங்கட்டும். அநாதியாய்த் தொடர்ந்துள்ள அஞ்ஞான அந்தகாரத்தை நீக்கும் ஞான சூரியனாய் விளங்கு. மனம், இந்திரியங்கள், சரீரம் முதலியவற்றைத் தத்தம் காரியங்களில் அபிமானத்தோடு பிரவிர்த்திக்காவாறுதடுக்கத்தக்க ஆத்மஞானமாகிற விளக்கைக் கைக் கொண்டால்,நீ போக்கிய போக்த்ருத்வ மார்க்கத்தில்அடிகூட வைக்கமாட்டாய்.ஏகாந்தமாய் அசைவற்றிருப்பதை விட்டு விபரீத பாவனையால் பேதத்தைக் கண்டு பயங்கொண்டு அழியாதே. மற்றோ எங்கும் வியாபித்துள்ள "தத்ஸத்" ஸ்வரூப உன் நிஜவடிவத்தை அறிக.

வெளியே உள்ள ஜனங்களைஉள்ளே வரவொட்டாமல் தடைசெய்ய வேண்டுமென்றால் உள்ளே உன்னைத் தடைசெய்து கொள்ளாமல் முடியாது; ஆதலால் வெளியானைத் தடைசெய்வதெனில் உள்ளே உன்னைத் தடைசெய்வது தான். இங்ஙனமே பிறருக்குத் தீங்கு செய்யவேண்டுமென்று நீ

நினைத்தால் உனக்குத் தீங்கு செய்துகொள்ளாமல் அங்ஙனஞ் செய்ய முடியாது. ஆதலால் பிறருக்குத் தீங்குசெய்வதாவது உனக்குத் தீங்கு செய்வதே யாகும் "நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய் செய்யார் 'நோயின்மை வேண்டுபவர்''. ஏனெனின் நீ யொருவனே உலகத்தில் உண்மையான பொருள். சூரியன், சந்திரன், ஆகாசம், பிரகிருதி, சராசராத்மகமாய ஸகல அண்டங்கள், யாவும் உன்னுடைய கற்பனையே. உன்னுடைய பிரகிருதியே உன்னை மறைத்து உலகமாகிய கனவை உன்னிடத்தில் உண்டாக்குகின்றது.

பிரபஞ்சத்தில் எதுவும் நீயல்ல; உன்னை யன்றி உலகத்தில் ஒன்றும் இல்லை. ஆதலின் ஸகல விஷயங்களிலும் உன்னுடைய உண்மை வடிவத்தைப்பார். "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு'' உலகத்தில், "இழுத்துக்கோள்'' என்பது தான் உளவானபதம். இதை விபரீதமாய் "தள்ளு'' என்று சிலர் அறிகிறார்கள். இதற்குக் காரணம் சகலத்தையும் ஆகர்ஷிக்கும் மையம் தன்னிடத்தில் இருக்கின்றதென்று அறியாமையே. ஸர்வசக்தியுள்ள அஸங்க ஸத்தாஸ்வரூபமே நீ. உலகத்தில் இந்த அத்விதீய நிலையை அறிய உனக்கு ஒரு கேடுமில்லை.

ஊழ்வினைப் பயனாய் வருகின்றதென்று அடிக்கடி நினைக்கும் ஆபத்துகளுக்கும் பயத்துக்கும் மனத்தில் இடம்கொடாமல் நீக்கு. உண்மை நோக்கில் ஊழ் என்ப தொன்றுண்டென்று ஏற்படுவதில்லை. உண்டெனில் அஃதுன் கற்பனையேயாகும்.

கற்பிதமாயுள்ள இந்த பிராரப்தம் ஸர்வஞ்ஞ ஸர்வ சக்த வடிவ உன்னுடைய ஆத்ம ஸாக்ஷாத்கார க்ஷணத்திலேயே நாசமாகின்றது. உன்னுடைய வாழ் நாளின் ஒவ்வொரு க்ஷணமும் பரிபூர்ண பாவத்தை அடைவதிலேயே செலவழியட்டும். இங்ஙனம் நாமரூபாதிகளை யொழித்து ஜீவனைச்

சிவமாக்கும் ஆத்ம ஜ்ஞானும்ருத தடாகத்தில் ஸதா பானஞ் செய்துகொண் டிருப்பாயாக.

எதையறிந்தால் எல்லாமறியப்பட்டதாமோ அப்படிப் பட்டதையறிந்து என்றும் ஸ்வேச்சையாய் இரு. நெருப்பிற்கு ஒருபொறி எங்ஙனம் அம்சமோ, அங்ஙனம், நீ பிரஹ்மத்தின் அம்சம் அன்று. ஆனுல் நீ பிரஹ்மமே. இங்ஙனம் திடமாய் அறிகிறவரையில் பயம் நீங்காது. எப்பொழுது, எல்லாமாயும் பூர்ணமாயும் ஆகின்றனையோ, அப்பொழுது உனக்குத் தன் பிழைக்கும் அன்னியப்பொருள் இவ்வுலகில் இல்லவேயில்லை. உண்மை விளக்கத்தோடு அபேதப்பட்டுள்ள உனக்கு, நானு வித பின்னப்பொருள்களோடு கூடிய இந்த உலகத்தோற்றம் நசிக்கும்போது ஆச்சரியமுண்டாகாது. பஞ்சகோசங்களை யும் "நேதி நேதி" "இதுவல்ல இதுவல்ல" என்று களை யுங்கால் அவற்றிற்கு விலக்ஷணமாய் அவிநாசியாய் ஸதோதய மாய் விளங்குவது எதுவோ அதுவே நீயாகிற ஆத்மாவாம். வேதங்கள் உன்னுடைய மேலாகிய ஸத்ஸ்வரூபத்தை "நேதி நேதி" பதங்களால் நிர்ணயிக்கின்றன. நீ மோக்ஷஸ்வரூபியே. உனக்குப் பந்தம் இருந்ததும் இல்லை; மோக்ஷம் வந்ததும் இல்லை. எப்பொழுது ஆத்ம ஸ்வரூபத்தைப்பாவித்து ஆத்மா காரமாகவே நிலைத்து விடுகின்றனையோ, அப்பொழுது நாம ரூபப் பிரபஞ்சத்திற்குரிய சுகதுக்காதி துவந்துவங்கள் நாசமாகின்றன. ஆதலின் இத்தகைய நிலையிலேயே ஸதா இருப்பாயாக.

ஸகல அநர்த்தங்களுக்கும் காரணமாகிய தேஹோஹம் பாவனையைவிட்டுச் சிவோஹம் பாவனையைச் செய்க. எப் பொழுதும் சிவமாயிரு. ஒருகாலும் ஜீவனுய் இராதே.

ஞான பூமியின்கண் நிலைபெற்று நின்று, ஸகல ஜகத்திற் கும் காரணமாயும் காரண காரிய அதீதமாயுமுள்ள பரமாத்ம நிலைக்கு விரைவிற்செல்க. பரமாத்ம ஸ்வரூபம் அறியப்பட்ட போதே உன்னுடைய சம்ஸார மயக்கம் தெளிகின்றது. துரீய ஸமாதியிற் பழகி உன்னுடைய உண்மையான ஸ்வ

ரூபத்தை யறிதல் வேண்டும். அலையும் ஜடமனதைச் சாந்தப்படுத்திச் சின்மயமாக்குக. பித்தேறிய மனத்தின்கண் பொங்கிப்பெருகும் காமாதி விருத்திப்பிரவாகத்தைத் தடுத்து அமைதிப்படுத்துக. சோம்பலாய் இராதே. பரபக்தியுடையவனாயிரு. அதி கம்பீரமான உன் ஆத்ம ஸ்வரூபஸத்தையானது உன் மனத்தில் பிறழ்ச்சியின்றி நன்கு விளங்குக. ஆத்மீய சிந்தனையில் உன் புத்தி நிலைக்கட்டும். உன் மனம் தைரியத்தைப் பெற்றுச் சலனமற்ற ஆத்ம ஸ்வரூபமாகி, நாமரூபப் பிரபஞ்சத்தின் விசித்திரத் தன்மையைப் பொய்யாக்கட்டும். காரியஸகித அஞ்ஞானம் ஜெயிக்கப்படட்டும். அப்பொழுது நீ சுலபமாகவும் சுகமாகவும் ஜன்மக்கடலைத்தாண்டுவாய்; பரம சாந்தநிலை தோன்றும்; உன் மனமும் ஆநந்தவடிவமாகும்.

உள்ளொன்று நினைத்துப் புறமொன்று பேசாதே. சொல்லும் வண்ணம் செய்யமுயல்க. காரியப்படாத சொற்கள் பயனற்றனவேயாகும். ஆதலின் ஆத்மஸ்வரூபதத்துவத்தைச்சாஸ்திரத்தால் அறிந்து வாயால்பேசுவதையொழித்துச் சமாதியில் அப்பியசித்து அவ்வாறே ஒழுகமுயல். காணப்படும் இவ்வுலகத்திற்கும் கேழ்க்கப்படும் சுவர்க்காதி லோகாந்தரங்களுக்கும் உபாதான நிமித்த விவர்த்தகாரணமாகிய பரமாத்மாவை யுள்ளபடி அறிக. ஸத்துவாகாரப்பட்ட உன் சித்தத்தில் அத்வைத பரமாத்மாவை ஸோஹம் பாவனை செய்து உலகத்தின் இயல்பைப்பார். நாமரூப நாட்டத்தின் நீக்கமே ஸகல அநர்த்த நிவர்த்தியும் உபசாந்தமும் ஆம்: இதுதான் அபரோக்ஷாநுபூதிக்குச் சாதனமாகும். ஸர்வஸங்க பரித்தியாகமும் இதுவேயாம். நாமரூபப்பிரபஞ்சத்தில் சிலவற்றை விடுவது ஸந்நியாஸமன்று. சிலவற்றை விடுவதென்பது மற்றுஞ் சிலவற்றைக் கொள்வதேயாகும். இங்ஙனஞ் சிலவற்றை நீக்கி சிலவற்றைக்கொள்ளுதல் விருப்பு வெறுப்புக்களின் காரியமேயாகும். இது ஸர்வ ஸங்க பரித்தியாகமன்றாம். பரிச்சின்ன பேதப் பிரதீதிக்குக் காரணமாகிய நாமரூப நாட்டத்தையொழிப்பதே எல்லாப்பற்றுக்களையும் துறந்த உள்ளத்துறவாகும். இதுவே அகண்ட பாவனையாம். ஆத்மப்பிரத்தியக்ஷத்

9/41



தின் பொருட்டு அறியவேண்டிய அன்னியப்பொருள்களும் இல்லை; அறியக்கூடாதனவும் இல்லை. என்றால் தன்னைத்தவிர அந்நிலையில் வேறாக வொன்றுமில்லையென்பது கருத்து. ஆதலின் பரிச்சின்ன பேத புத்தியை யொழித்து உள்ளத்துறவு பூண்டு உன்னுடைய நிஜவடிவத்தை யறிக.

உலகம் விழித்திருக்கும் இடத்தில் நீ தூங்கு; அது எங்கே தூங்குகின்றதோ அங்கே நீ விழித்திரு. மறுக்க முடியாத ஸத்தையை யுடைய உன் ஆத்மஸ்வரூப அநுஸந்தானத்தோடு எப்பொழுதும் விழிப்பாயிரு. அத்விதீய அபய ஸ்வரூப ஆத்மாவோடு அபேதப்பட்டு நிற்கும் நிலையில், இந்திரஜாலம்போன்ற இப்பிரபஞ்சத்தில் உன்னைப் பயமுறுத்தவும் உன்னால் பயமுறுத்தப்படவும் யாதொரு பொருளுமில்லை. பேதநாட்டமே நாசமாய்விட்டபடியால். இது அதிக ஆச்சரியமான ஸஜாதீய விஜாதீய சுகதபேதமற்ற நிலை. இந்நிலையில் கொல்பவனுமில்லை கொல்லப்படுபவனுமில்லை. யழிக்கிறவனுமில்லை.யழிக்கப்படுபவனுமில்லை இதுவென்பதுமில்லை. அதுவென்பதுமில்லை. யாவும் உன் வடிவமாயிருக்கின்றன, சிநேகனும் விரோதியும் நீயே. இத்தகைய திடஞானந்தான் வாழ்நாளைப் பயன்பெறச் செய்வதாகும். இதனைப் பிரத்திக்ஷமாயறிய ஸமாதியை அப்பியசிக்கவேண்டும். கண்டிதமாயுள்ள உன் அற்பவியஷ்டி சரீரபாவனையை யறவே யொழிக்கின் நீ சம்ஸார பந்தத்தினின்றும் நீங்கினவனேயாவாய். உன் ஜன்மம் நிஷ்பலமானதாகாது. நித்திய நிரதிசயாநந்தமெனும் மகுடம் சூட்டப்பெறுவாய். இதுதான் பரமாத்மாவின் ஸ்வரூபமாகவே விளங்கும் ஒப்புயர்வற்ற புகழ்ச்சியைப் பெற ஏற்பட்டுள்ள ஒரே வழியாகும்.

பரம்பொருளோடு அபேதப்பட்டிருக்கும் உண்மையான வாழ்க்கையில் உன் ஆத்மாவை விழிப்படையச்செய்க.

பிரவிருத்தி மார்க்கத்தினால், நாமரூப உலகத்திற்கு அனுப்பப்பட்டிருக்கிறாய். ஆகலால் இப்பொழுதே உன் ஆத்மஸ்வரூப சேதன பூமியையடைய உள் முகமாய்த்

திரும்பு. அப்பொழுது நாமரூபங்களுக்கு அந்தர்யாமி யாய் விளங்குவதை நீ அறிவாய். பிரமையின் காரியமாகிய உலகத்தின் பொய்த் தோற்றத்தால் உன் மனம் அபகரிக்கப் பட்டிருக்கின்றது. மெய்யறிவு பெற உன்னிடத்தில் மறைந் திருக்கும் ஆத்மீய சக்தியை நன்கு பிரகாசப்படுத்திப் பாரமார்த்திக சத்தையை யுணர்தற்குரியவாறு உன் மனத்தை உயர்த்தவேண்டும். அதாவது தூய்மையாக்கவேண்டும். ஜீவத்தன்மை பல அசுத்த எண்ணங்களின் கூட்டமே யாதலின், ஜீவனுகிற எவனும் எண்ணமற்றவனுயில்லை. உப யோகமற்றவனுயுமில்லை. ஜீவத்தன்மைக்குக் காரணமான அசுத்த எண்ணங்களை யொழித்து, ஒருவன், ஆத்ம ஸாக்ஷாத் காரத்திற்குச் சாதனமான சுப வாஸனைகளைக் கொள்ளக் கூடும்; இவன்தான் ஆத்மலாப முயற்சியில் முழுமனதுடன் பிரவிருத்திப்பவனுவான். எப்பொழுதும் மனத்தைப் பஞ்ச கோச அபிமானத்திற் சிக்கும்படி விடாதே. உன்னுடைய ஸ்வபாவமான உயர்ச்சியினின்றும் உன்னைத் தாழ்த்தும் அடிமை வாழ்க்கையில் செல்லாதே. அது உன் ஸ்வப்பிரகா சத்தை மறைக்கும் வாழ்க்கையாகும். அஞ்ஞான இருளில் சிக்கிக்கொண்டு ஆயுள்பரியந்தமும் "இருள் இருள்" என்று கதறியழாதே. உன்னுடைய அழுகையால் இருள் ஒரு காலும் நீங்காது. ஆத்மவிசாரமாகிய தீக்குச்சியை ஏற்று. இருள் ஏது! இங்ஙனம் உன்னுடைய வாழ்க்கையைப் பிரகாச மாயும் இதரர்களுக்கு வழி காட்டியாயிருக்கும்படியும் செய்க.

கற்பித ஜீவத்தன்மையை நீக்கிக்கொள்ள உறுதியாய்ப் பிரதிஞ்ஞை செய். அப்பொழுதுதான் உன் மனத்திலுள்ள ஆந்தரப்பற்றுகளெல்லாம் ஒழிந்து மோக்ஷ கீதத்தைப் பாட முடியும். உன்னுடைய வாழ்நாள் முழுதும், உன் பரிசுத்த மனம் அத்வைதாநந்த லஹரியைப் பருகி அதிலேயே திளைக் கட்டும். இந்த உறுதி உன் ஹிருதயத்தில் வேரூன்றி நன்கு தழைக்கட்டும். ஆத்ம ஸ்வரூபத்தைத் தேட ஆரம்பித்தால் அது ஆந்தரத்திலன்றிப் பாகியத்தில் அகப்படுகிறதேயில்லை. இதுதான் உண்மை. உன்னை நீ உணர்ந்தால் எல்லாம் உண

ரப்பட்டவையே. இத்தத்துவத்தினை யறிந்து மனிதப் பிறவியின் பெரும்பயனை யடைய முன் வந்து தைரியமாய் விழித்திரு. இதுதான் உன் ஆத்மக்கடலுள் ஆநந்த முத்தைப் பொறுக்கும் வழி. உன் விருத்தியைச் சற்று அந்தர் முகப்படுத்தினால் மனம் ஸத்துவாகாரப்பட்டு மைத்திரி, கருணை, முதிதை உபேக்ஷை முதலிய சுபவாஸனைகள் எல்லாம் ஒருங்கே ஏற்பட்டுவிடுகின்றன. நிச்சலமாய், தைலதாரை போன்ற இந்த ஆத்மாகோசர விருத்தியிலேயே பழகி ஸச்சிதாநந்த அகண்ட ஆத்மஸ்வரூபத்தையடை. ஸஜாதீய விருத்திப் பிறவாகமாகிற நிதித்தியாஸனம் ஸமாதிக்குச் சாதனமாகும். ஜீவயாத்திரைக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரமே சிறந்த விளக்காகும். ஆத்ம ஞானியின் வாழ்க்கையே வாழ்க்கை ; மற்றவர் உயிர்த்திருந்தும் இறந்தவரே யாவர். உனக்குத் தேகாபிமானம் அறவேண்டும். அப்பொழுதுதான் இந்த உலகமாகிய நாடக சாலையில் அறிவோடு நடிக்கமுடியும். நீ ஒரு சக்கரவர்த்தியாகவோ அல்லது தோட்டியாகவோ நடிப்பதாக வைத்துக்கொள்வோம். அங்ஙனம் நடிக்கும்போது நீ பூண்டிருக்கும் வேஷத்துக்குத் தக்கவண்ணம் நடித்தாலும், உண்மையை மறந்தவனே;ஏனெனில் நீ அரசனுமல்லை தோட்டியுமல்லை. மற்றோ நாசரகிதமான நித்திய ஆத்மஸ்வரூபன். உன் ஞானப்பார்வையை, மனோகற்பிதமான நாமரூபப் பிரபஞ்சத்தோற்றமாகிற இந்திரஜாலமும், பிரகிருதியின் காரியங்களான விஷயாதிகளும்,மறைக்காமல் இருக்கட்டும். சப்தாதி விஷயப்பிரபஞ்சம் கேவலம் பொய்த் தோற்றமேயாம். ஆகையால் உன் நித்தியாநித்திய விவேகதீபத்தினால் "உள்ளது ஒன்றே ; மற்றைய அனைத்தும் பொய்யே"யென நிச்சயித்து ஸகலபேத உணர்ச்சியாகிற இருளை யோட்டுவாயாக. இதுதான் ஞானவாழ்க்கை.

உன் மனோவிருத்திகள் யாவும் ஆத்மஸ்வரூபத்தில் லயத்தையடையட்டும். நீ ம-ா-ஸ்ரீயுமல்ல;சௌபாக்கியவதியுமல்ல; ஆண்பால் பெண்பால்களில் சேராத அலியுமல்ல. இந்த உலகத்தில் ஸகல பிரமாணங்களுக்கும் எட்டாத வடிவினன்: நாமரூபாதிகளுக்கு அதீதமானவன். இந்த பாவனை

யோடு ஸகல நாமரூபப் பிரபஞ்சத்தை உனக்குள் லயப் படுத்துவாயாக. திருப்தியாயிரு. மனஸ்தத்துவத்தை நன்ருய் உணர்க. உணர்ந்தால் சாமார்த்தியமுள்ள ஸாரதிக்கு அடங்கி நடக்கும் குதிரைகளைப் போல் உனக்கு, உன் மனம் அடங்கி நடக்கும். மனத்தின் பரிபாகத்தை (தன்மையை) எண்ணங்களால் அறிக. உன்னுடைய அநுபவமாகிற ஒவ்வொரு புஷ்பத்தினின்றும் ஸாரத்தைக் கிரகிக்க. உன்னுடைய ஸ்வாநுபவமே உனக்குச் சிறந்த குருவாகும். அநுபவத்தைவிட்ச் சிறந்த குரு இல்லை. நீ செய்யும் சாமானிய கர்மங்களிலிருந்து சிறந்த தத்துவங்களை யறியக்கூடும். கர்மத்தின் தத்துவத்தை நன்கறிந்து, உன்னை விவகாரத்திற்கு இழுத்துப் பந்தப்படுத்தும் அவித்தை யென்கிற விலங்கை உடைத்தெறிக. ஸதா உன் மனம் ஸ்வரூப ஸமாதியில் மூழ்குக. அது எப்பொழுதும் ஸன்மார்க்கத்தையே நோக்கட்டும். பிரத்தியகாத்மாநுஸந்தானத்தைத் தவிர மற்ற அநாத்ம எண்ணங்களை உன் மனத்தில் இருத்தாதே. சிதாகாசத்தில் (ஜீவப் பிரஹ்ம ஐக்கிய) அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தினுல் உற்பூதமான ஆநந்தவெள்ளம் பொங்கிப் பெருகி அகண்டமாய்நிலைக்க. உன்னுடைய அகண்ட அன்பாம் மலரின் சிறந்த மணமானது எங்கும் வீசிப் பிரகாசிக்கவும். இங்ஙனம் ஸர்வாதீதமான ஆத்ம ஸ்வரூப உபசாந்த நிலையை அநுபவிக்க.

நாமரூப வடிவ ஸர்வப் பிரபஞ்சத்தையும் அஸ்தி, பாதி பிரய வடிவ பிரஹ்மமாய் நோக்குக. நித்திய நிர்விகார ஸ்வரூபமாயுள்ள உன் ஆத்மாம்ருதமானது உனக்குள் நன்கு வருஷித்து அதனுல் நாமரூப நாட்டமாகிற அசுத்தமானது ஒழியட்டும். சகல பேதங்களையும் கற்பனையாகப்பார். நாமரூப பேதப் பிரபஞ்ச நாட்டமுடைய அஞ்ஞர்களின் கண்களை மறைக்கும் தூசாகிற இருளை யொழிக்க. நித்தியாநந்த ஸ்வப்பிரகாச ஞான சூரியன் உன் ஹிருதயா காசத்தில் உதிக்கட்டும். அகண்டமாயுள்ள உன் ஆத்மாவைத் தேகமாகிற சிறையில் அடைத்துக் கண்டித்து உன் ஸ்வபாவத்திற்குச் சற்றும்

ஒவ்வாத அநாத்ம எண்ணங்களாகிற கெட்ட காற்றைச் சுவாசிக்கச் செய்யாதே. விஷய சம்பந்தமான சுகதுக்க சம்பந்தம் சிறிதுமின்றிய நிரதிசயாநந்த சுத்தவாயுவை நீ சுவாசிக்க வேண்டும். "இத்தேகம் நான், மனம்நான், இதுநான், அதுநான்" என்னும் அநாத்ம பாவனையாகிற விஷத்தை உன் மனத்திற்குக் கொடாதே. வேதத்தின் பரமசித்தாந்தமாகிய அத்வைதத்தின் உயர்ந்த தத்துவமாகிய "ஸோஹம்" என்னும் அநுசந்தானத்தை ஒவ்வொரு நிமிஷமும் செய். இதைவிட வேறுயுள்ள அநாத்ம பாவனையானது உன்னுடைய பரம புருஷார்த்தமாகிற அகண்ட நிலையின் வளர்ச்சிக்குப் பிரதிபந்தகமே யாகும். சுத்தமாயும் கேவலமாயும் இரு. இதுதான் உனது இயற்கைச் சுபாவம். உன் ஸ்வரூபம் கேவலாத்வைதமே யாகும். சகளபாவனை (துவைத புத்தி) பயத்திற்கும் மரணத்திற்கும் அதிசமீபமானது. அநந்தமே ஆநந்தமாம். ஆத்மாவின் அஸங்க நிரஞ்சன சுத்தத் தன்மையை வரவேற்பாயாக. இங்ஙனம் ஆத்மாநுஸந்தானஞ் செய்து பேச்சற்ற பரம சாந்த நிலையிற் செல்க.

உன் ஜீவித காலத்தில் ஒவ்வொரு நிமிஷத்தையும் சன்மார்க்கத்திற் செலவிடு. ஏனெனில் காலந்தான் உனது பொக்கிஷம். உன்னுடைய ஆபத்தனமாகிற காலமானது வீணாய்ச் செலவழிக்கப்படின், நீ வறுமையை அடைந்து தீனனாய் வருந்திப் பிச்சையெடுக்கும்படிநேரிடும். காலத்தின் நெற்றிமயிரை நீ சதா பற்றியிருக்கவேண்டும். பற்றாது விடின் அது மறுபடி நமக்குக் கிடைக்காது. விநாடிகள் நிமிஷங்களையும், நிமிஷங்கள் மணிகளையும், மணிகள் இராப்பகல்களையும் கொள்ளை கொள்ளுகின்றன. இங்ஙனம் அஹோராத்ரங்கள் வீணிற்செலவிடப்படின்,அவைஉனக்குப்பெருந்துன்பத்தைத் தருவனவாகும். "நாளெனவொன்று போற்காட்டி யுயிரீனும் வாள துணர்வார்ப்பெறின்." ஆதலின் ஒவ்வொரு விநாடியையும் பயன்படுத்துவாயாக. இம்மனிதப் பிறவியை யடைந்ததன் பயன் அவிநாசியாயும் ஸ்தோதயமாயும், கற்பனைகளற்றதாயுமுள்ள அத்விதீய ஆத்ம தத்துவத்தை யபரோக்ஷமாய்

அறிவதேயாம். ஆதலின் பிரபஞ்ச நாட்டமாகிற தூக்கத்தினின்றும் விழித்துக்கொள். உன்னைச் சுற்றிலும் ஆவரித்துள்ள அஞ்ஞானத் திரையைக் கிழித்தெறிக. அநாதியாய் உன்னைத் தொடர்ந்துள்ள மாயாமய ஸ்வப்னத்திலிருந்து விழிப்படைவதைவிட நீ செய்யத்தக்க வேறு காரியமில்லை. விருப்பு, வெறுப்புக்களுக்கும், சுகதுக்கங்களுக்கும் காரணமாகிய மோகமென்னும் இராஜ்யத்திலிருந்து நீ விலகவேண்டும். அற்றது பற்றெனின் உற்றது வீடென அறிக. அடையவேண்டியதை இன்றே இப்பொழுதே அடைக. இன்றேல் எப்பொழுது மின்று.

"ஸோஹம் நானே அது" வென்னும் பாவனையைச்சதா செய்க. இந்த அநுஸந்தானத்தில் உன் சரீரத்தின் ஸப்த தாதுக்களும் ஊறுக. ஸ்தூல ஸூக்ஷ்ம காரணகோசங்களுக்கு விலக்ஷணமாயுள்ள ஸ்வேச்சையே யாவர்க்கும் பரம புருஷார்த்தமாகும். நாமரூபத்தோற்ற முள்ளபோது கூட அசலமாயும் அவிகாரியாயுள்ள உன் பாரமார்த்திக இருப்பை ஸதா அநுசந்தானம் செய். இந்த ஸ்வாநுபூதிப் பிரகாசம் உனக்குள் தனித்து விளங்கட்டும். இதுதான் ஒவ்வொரு ஹிருதயத்திலும் பிரகாசிப்பது. இந்த பிரகாசத்தால் உன் (ஹிருதய) ஆகாசத்தை நிரப்ப வேண்டியது. இந்த ஞான விளக்கைக் கைப்பற்றினால், அந்தரங்கமாகிய தஹராகாசத்தில் ஸகல பிரபஞ்ச அதிஷ்டான வடிவத்தைப் பார்ப்பது நிச்சயம். நீ உலக ஆசைகளுக்கு இடந்தராமல், இந்நிலையில் நின்று உன் வாழ்க்கையை நடத்தவேண்டும். இந்நிலையில்தான், ஸகல நாமரூபங்களையும், உன் ஸ்வரூபக்கடலில் ஒரு காலத்தில் தோன்றும் குமிழியென அறிதல்கூடும். நீ இந்நிலையிலேயே நிற்கும் பக்ஷத்தில் அத்தியாஸ கூபத்தில் விழுந்து மூழ்கமாட்டாய். ஆதலின் ஸ்வேச்சைக் கொடியை நாட்டு.

பிரபஞ்சமென்பது காலதேச நிமித்தாதிகளின் அஸ்திவாரத்தின்மேல் கட்டப்பட்ட நாமரூப வடிவமாயுள்ள ஒரு சிறைச்சாலையாகும். திரிபுடிவடிவமாயுள்ள இந்த

உலகத்தை யான்எனது என்னும் சம்பந்தங்களோடு, கயிற்றிலரவுபோலவும், கட்டையிற்கள்வன் போலவும், சுக்தியில் வெள்ளியைப் போலவும் (நிர்வாஸனையாய்) நீக்குக. இந்த உலகமானது கானல் ஜலம்போல் மித்தையாயிருக்கும் உன் மனத்தோற்றமேயாகும். மனம் எந்த அளவுக்கும் விரியதக்கதாயிருப்பினும் அஃதோர் உயர்ந்த தத்துவமல்ல.மகாமாயிகனுகியஉன்னுடைய இந்திரஜால(கற்பித)மே இந்த உலகு. அதலின் மித்தியாஸ்வபாவமாகிய இந்த உலகத்தோடு உன்னைச் சம்பந்தப்படுத்தி அசுத்தமாக்காதே. சிந்தையும் மொழியும் சேரா நிலைமைத்தாகிய அதீந்திரிய ஆத்ம ஸ்வரூபத்தைச் சந்தேக விபரீதங்களற அறிந்தால் உன்னை இந்த உலகம் கட்டுப்படுத்தாது. இந்த உலகம் பஞ்சேந்திரியங்கட்கு விஷயமாய் நிலையற்றிருப்பது. விநாசியாயும் அநேகமாயும், விசித்திரமாயும் உள்ள பிரகிருதி விலாஸமாகிய இந்த உலக விவகாரம், அவிநாசியாயும், ஏகமாயும், அத்விதீயமாயுமுள்ள புருஷனுடைய லீலையேயாகும். இந்த உலகம் உன்னிலும் வேறன்று. இந்த நாட்டம் திரிபுடித்தோற்றமற்ற அகண்டப் பார்வையாகும். இவ்வகண்ட விருத்தியில் போக்த்ரு போக்கிய பாவனுரூப ஸமஸ்த பேதங்களும் நாசமாகின்றன. தத்துவமஸி, நீயே பரமாத்மா. உனக்குத் தீவிர முமுக்ஷுத்துவ மிருக்குமேயானல், ஆத்மாநந்தா ம்ருதத்தை நீ பருகுவாய். இவ்விஷயத்தில் உனக்குத் துணை உன் மனமேயாகும். பரிசுத்தமாகிய ஸத்வபரிணும சித்தந்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற் குரியதாகும். சித்தப்பிரஸாதந்தான் சாந்தாநந்த மாளிகையின் வாயிலாகும். அசுத்த மனத்தினல், எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாயும், லயஸ்தானமாயுமுள்ள உன் ஆத்ம தத்வத்தை அறிதல் முடியாது. சாஸ்திரங்களின் பரோக்ஷ ஞானத்தினுலும் தர்க்கங்களினுலும் பாரமார்த்திக ஸத்தின் திக்தரிசனமும் உண்டாகாது. அநர்த்த நிவிர்த்தி - ஆநந்தப் பிராப்தி ரூப மோக்ஷமெங்ஙனமாகும்? ஆதலின் ஸகல விதண்டா வாதங்களைவிட்டு குரு உபதேசத்தில் விசுவாசத்துடன் சாஸ்திர சம்மதமான, யுக்திகளைக் கொண்டு சுத்த சித்தத்தினல் ஆத்மாநுஸந்தானஞ் செய்து ஆத்மநிஷ்டா பரனுகுக. அப்

பொழுது நீ நிரதிசயாநந்த உபசாந்த ஸ்வரூபமாய் விளங்குவாய்.

பஞ்ச கோசங்களோடு கூடிய மூன்று சரீரங்களும், ஜாக்கிர, ஸ்வப்ன, சுழுத்தி அவஸ்தைகளில் நீ அநுபவிக்கின்றவைகளேயாகும். பஞ்சகோச, சரீரத்திரய விலக்ஷணனும், அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயும் உன்னை நீ யறிகிற வரையில், இவைகள் உன்னைத் தப்பியோட விடா. இவற்றிற்கு அதீதமாய் நிற்கும் நிலை துரியமாகும். நீ எந்த நிமிஷத்தில் உலக பாசங்களினின்றும், விடுபடுகின்றனையோ அந்த நிமிஷத்திலேயே பிரஹ்மமாகிறாய். விநாசியாயுள்ள ஸகல விஷய சுகங்களுக்கும் அதீதமாயுள்ள நித்தியாநந்த ஸ்வரூபமாயிருப்பதுதான் உன் ஸ்வபாவ நிலை. ஆத்மாவானது மனம், இந்திரியங்கள், ஸ்தூல சரீரம் முதலியவற்றோடு சேர்ந்ததென்னும் மயக்கவுணர்வால், தோற்றிய ஜீவத்தன்மை கற்பிக்கப்பட்டு, அது காரணமாகக் கண்ட பாவனையுண்டாய்த் துன்பம் நிகழுகின்றது.

உனக்குரிய பெயர் ஓம் என்பதாம். அது தான் உனது வாசகம். பிரணவத்தின் நான்கு பாதங்களையும், எட்டு அங்கங்களையும், மூன்று ஸ்தானங்களையும், ஐந்து தேவதைகளையும் அறிந்துணர்க.

முதன் முதல் வாக்கை நிரோதஞ் செய். எப்பொதும் அதை அடக்கி உன் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொள். பின்னர் வாக்கை மனத்தில் லயப்படுத்துவாயாக. இங்ஙனஞ்செய்யின் மெள்ள மெள்ள உன் மனம் ஸ்வாதீனப்படும். இதில் சந்தேகமில்லை. பிறகு அம்மனத்தைப் புத்தியிலும் புத்தியை வியாபக ஆத்மாவிலும் லயப்படுத்தல் வேண்டும். மீண்டும் இவ்வகண்ட ஆத்மாவை சாந்த ஆத்மாவில் லயப்படுத்தல் வேண்டும். என்றால் அகண்டாகார விருத்தியுமற்று உபசாந்த நிலையையடைதல் வேண்டுமென்பது கருத்து, இந்திரியங்களின் மூலமாய் வெளியே விஷயங்களை நாடியோடும் மனோ விருத்தியைத் தடுத்து, அந்தர் முகப்படுத்தி "நானே எல்லாம், எல்லாம் நானே" என்று பாவித்தல் வேண்டும்.

ஜீவ ஆவரணத்தைப் பங்கப்படுத்தி "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் திட அபரோக்ஷ அகண்டாகார சமாதியிற் பழகுக. இதனால் அத்விதீய அகண்ட சுத்தப்பிரஹ்மமானது "தானே யென" வெளியாகும். இதுதான் அபரோக்ஷ அநுபூதி யாகும். இந்த அநுபூதியால் தான் ஜனனமரண சமுஸார அநர்த்தம் நிவர்த்தியாகும். உன்னுடைய அத்விதீய பிரத்தியக் ஆன்ம தத்துவத்தை அறியாமையினாற்றான் நன்மை தீமைகள், அறிவு அறியாமைகள், ஜனன மரணங்கள், காரிய காரணங்களாகிற ஸகல கற்பனைகளுந் தோற்றுகின்றன. ஆதலின் அகண்ட சச்சிதாநந்த ஸ்வரூபமாகிய உன் ஆத்மாவை அறிதல்வேண்டும். இந்த சித்கன ஆத்மா தான் உன் ஜாக்கிர சொப்பன, சுழுத்திகளை விளக்குகின்றது. இதுதான் உன் ஹிருதயாகாசத்தில் விளங்குவது. சாந்தமாயும், சிவமாயும், பிறப் பிறப்பற்றதாயும் அத்வைதமாயும், ஓங்காரத்தின் துரீய பாதத்தில் விளங்குவதாயுமுள்ள ஒன்று தான் அறியத்தக்கது. இது சகல அத்தியாஸங்களுக்கும அதிஷ்டானமாயுள்ளது.

உணர்பவனை யுணர்க. (ரூபத்தைக்) காண்பவனைக் காண்க. (சத்தத்தைக்) கேழ்ப்பவனைக் கேழ்க்க. (அறிவை) அறிபவனை அறிக. அப்போது உன்னை நீ அறிந்தவனாவாய். உன் உண்மை வடிவத்தை யறிந்து அங்ஙனமே ஒழுகுக. நீ தத்துவ ஸ்வரூபியாய் விளங்குக. இந்நிலையைக் கனவிலும் மறவாதே. பெண், மண் பொன் என்னும் உடைமைகள் நீயல்ல. உடைமை உடையவனைவிட வேறு. உடையவன் ஸ்வரூபம் வேறு! உடைமையின் ஸ்வரூபம் வேறு. ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் வைக்கப்பட்ட ஜலத்தின் தன்மை வேறு; கண்ணாடியின் தன்மை வேறு; எங்ஙனம் ஜலத்தின் ஸ்வரூபமான பிராணவாயுவும் ஜலவாயுவும் கண்ணாடியின் ஸ்வரூபமன்றோ அங்ஙனமே, ஸ்தூல சரீரம், போக்கியமாயுள்ள விஷயாதிகள், பொன், மண், பெண், கௌரவம், பட்டங்கள் முதலியன உன் உண்மையான ஸ்வரூபமன்று. இவைகள் கேவலம் தோற்றல் மாத்திரமே.

இவற்றில் ஒருகாலும் ஒட்டாதது உன் ஸ்வரூபம். உண்மை நிலை மனோவாக்குக்களுக்கும் எட்டாதது ஜடமாகிய ஸ்தூல சரீராதிகளுக்கு இருப்பு உன் ஸ்வரூபந்தான். அவை உன் மனத்தினால் கற்பிககப்பட்டவைகள். ஆதலின் அவை ஆத்மத்தன்மையுடையனவல்ல.மற்றோ அநாத்மாக்களேயாம். ஆதலின் அகண்ட நித்தியாநந்தமாயுள்ள உன் பிறப்புரிமையாகிய பிரத்தியக்தத்துவத்தை அபரோக்ஷமாய் அறிக.

நீ உன் மனத்தை எப்பொழுதும் அடக்கமாய் வைத்திருக்கவேண்டும்; கற்பனை செய்ய அதற்கு இடந்தராதே, சாந்தமாயும், ஸ்திரமாயுமுள்ள நடுவு நிலையில் அதை நிற்குமாறு செய்க. எப்பொழுதும் அது (மனம்) பரிபூர்ண வியாபகமாய் இருக்கும்படியே செய்தல் வேண்டும். இன்றேல் அது கண்டிதமாய் பின்னப்பட்டு நாமரூபப் பிரபஞ்சவாஸனையால் அமிழ்த்தப்படுவதாகும். கிரியா ரூபமும் அநுபவரூபமுமான விருத்திகளின் கூட்டமே மனமாகும். மனம் எப்பொழுதும் உள்ளேயேசலித்து இயங்குந்தன்மைத்தாகும்.இங்ஙனம் சலன ஸ்வபாவமாயுள்ளமனத்தைப்பெருமுயற்சியினால் நிவாத தீபம்போல் அசையாமல் நிறுத்தல் வேண்டும்,தேகம், மனம், புத்தி முதலியவைகளில் யானெனும் பாவனையும், விஷயாதிகளில் எனதெனும் பாவனையும் அற்று ஒழியும்படி பிரஹ்மோஹம் பாவனையைச் சதா செய்க.உண்மையை யறிந்து அநாத்ம அத்தியாஸங்களை யொழித்து ஆத்மஸ்வரூபமாய் நிலைப்பாயாக. இதுதான் நித்தியாநந்தப் பெருவாழ்வைப் பெறுவதற்கான வழி. மண், பொருள், பொன் முதலிய ஆசைகளையும், தேகவாஸனையையும் விட்டொழிப்பாயாக. ஸர்வாதாரமாயுள்ள ஆத்மதத்துவத்தோடு உன் மதத்தினைச் சம்பந்தப்படுத்துவாயாக. இத்தகைய மதந்தான் ஒவ்வொரு வகுப்பினர்க்கும் பிராஞுதாரமானது. இந்த வேதாந்த மதத்தின் ரகசியங்களை நன்கறிந்து ஆத்ம ஸ்வரூபமாயுள்ள உன்னை அகண்ட அபேத ஸ்வராஜ்யத்தில் நிலைபெற்று விளங்கச் செய்வாயாக.

ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரணமாகிய மூன்றுசரீரங்களின் நாசத்தினுல்தான் நித்தியாநந்தம் உண்டாகும். தேகத்தை எவ்வளவு சுத்தமாயும் ஒழுங்காயும் வைத்திருப்பினும் அல்லது உள்ளங்கால் முதல் உச்சிவரையில் எவ்வளவு விபூதியைப் பூசிக் கொண்டிருப்பினும், அந்தக் கரணம் சுத்தமாகிச் சாந்தப்படாவிடின் முத்தி கிடையாதென்று நன்ருயறி. மனோவிருத்திகளை யடக்குதலன்றித் தலையை மழித்தலும், காஷாயம் பூணுதலும், கழுத்தில் உருத்திராக்ஷ துளசிமணிகளைப் பூண்பதுவும் ஆத்ம அபரோக்ஷ வடிவ முத்திக்குச் சாதனங்களாவதின்று. வெளி வேஷங்கள் உலக மயக்கமேயன்றி மற்றன்று; வேஷத்தினுல் எண்ணிறந்த பிறப்புக்களிலும் மோக்ஷம் உண்டாவதில்லை; இது சத்தியம்! ஆகலின் வெளி வேஷங்களை அறவே விட்டொழித்து அவிநாசியாயும், அஸங்கமாயும், நிர்விகாரியாயுமுள்ள ஆத்ம வேஷத்தை (பாவனை செய்து அதன் மூலமாய் சித்திக்கும் நிலையை) அடைய வேண்டும். உன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் பாவனுதீதமானது: அநித்திய வஸ்து பாவனை யழியுந்தன்மைத்தேயாகும் அகண்டாகார அறிவோடு கூடியநிலை நித்தியமானது. ஸகல அத்தியாஸங்களுக்கும் அதிஷ்டானமாயுள்ள ஸர்வாநுஸ்யூத, வியாபக ஸத்தாஸ்வரூப ஆத்மாவில் ஸதா ஐக்கியப்பட்டு நிலைப்பாயாக. இந்நிலையை அடைய, நீ விவேகமாகிய அக்கினியால் திரிபுரங்களையும் சுட்டு எரிப்பாயாக — லிங்கசரீரம் நாசமானுல்தான் பிறப்பொழியும். வறுபட்ட விதை எங்ஙனம் முளைக்கும்? "நான் சரீரமல்ல", என்னும் திடஞானத்தினுல் ஸகல சரீரங்களில் யானென்னும் மயக்கமும் விஷயாதிகளி (உலகத்தி)ல் எனது என்னும் அத்தியாசமும் நீங்குகின்றன. இங்ஙனம் பிரஹ்மோஹம் பாவனையால் பஞ்சகோசங்களில் (சரீரத்திரயங்களில்) நான் என்னும் மயக்கத்திற்குக் காரணமாயுள்ள அறியாமையை யொழித்து ஜனன மரண ரூப பந்தத்தினின்றும் நீங்குவாயாக.

நாமரூபப் பிரபஞ்ச காரணமான பிரகிருதியை நீ புன்சிரிப்போடுகூடிய ஆநந்தப் பார்வையால் நோக்கின், அசத்து ஜட துக்கரூபமான அந்தப்பிரகிருதி உன்னுடைய பாத

தூளியைச் சிரசில் வகித்து உனக்கு அடிமையாகின்றது. பேரானந்தப் பிரவாகத்தை யுனக்குள் பெருக்கிப் புறத்திலும் வியாபிக்கச் செய். அத்யாத்ம வித்தையை அநுபவத்திற்குக் கொண்டுவாராமல் பரோக்ஷமாய் மாத்திரம் இருக்க விடாதே. பரோக்ஷ சாஸ்திர ஞானம் வித்தியாகர்வத்தை யுண்டாக்கும். ஆதலின் ஆத்ம அபரோக்ஷ ஞானத்தில் அநுதினம் பழகு. உன்னுடைய தஹராகாசத்தில் விளங்கும் அத்விதீய மஹா மௌன ஸ்வரூபத்தை அகண்டகார விருத்தியால் ஸதா அநுஸந்தானஞ் செய். நாமரூபப் பிரபஞ்சத்தின் அபாவமே உன்னுடைய இருப்பிடமாம். நீயே பரம்பொருளாய் இருக்கிறாய்; ஆதலின் "யான், என" தென்னும் உலக நாட்டத்தினால் அதிதீவிரமாய் வளரக்கூடிய ஸம்ஸார விருக்ஷத்தின் விதையாகிய மயக்கவுணர்வை உன்னுடைய வாழ்நாளில் எப்பொழுதுங் கொள்ளாதே. அவித்தையின் காரியமாய் வளர்ந்த ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களில் "நானென்" னும் தாதான்மிய உணர்ச்சியானது உனக்கு ஜன்மாந்தரங்களிலிருந்து தொடர்ந்து வந்துள்ளது. இந்த மயக்க உணர்வைத் தத்துவ ஞானத்தினால் ஒழிப்பாயாக. தத்துவஞானமாவது,பிரஹ்மத்தை யுலகமென்று பாராமல் பிரஹ்மமாகவே பார்ப்பதாம். இப்பொழுது நீ பிரஹ்மத்தைப் பஞ்சேந்திரிகளினால் சப்தாதி விஷய ஸ்தூல வடிவ உலகமாகவும், மனத்தினால் சங்கற்ப வடிவ ஸூக்ஷ்மப் பிரபஞ்சமாகவும் பார்க்கின்றாய்: இந்தப் பார்வையை யொழித்து, சப்தாதி விஷய வடிவமாகவும் சங்கற்ப ஸ்வரூபமாகவும் தோற்றும் உலகத்திற்கு ஸத்தாஸ் பூர்த்தியைத் தரும் ஒன்றைப் பார்க்கவேண்டும். இந்தப் பார்வையில் தான் உலகத்தோற்றம் ஒழியும்; ஆநந்த வெள்ளம் பெருகும். "பாக்கியவான்களுக்கு இந்தப் பார்வை தோன்றும்."

ரஜோகுண காரியங்களாயுள்ள காமம், குரோதம், பொறாமை முதலிய துர்விருத்திளால்தான் உனக்குக் கெடுதியுண்டாகின்றது. ஆசையே சகல அநர்த்தங்களுக்குங் காரணமாம், ஆதலின் ஆசையாகிய நோய் நம்மை யணுகா வண்ணம் நாம் மிகவும் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். உண்மையில்

உனக்குத் தகுதியற்ற ஒரு பொருளை அடைய நீ இச்சிக்கிறாய். நீ யிச்சிக்கும் பொருள் உண்மையில் உனக்குத் தகுதியுள்ளதாயிருக்குமேயாயின், அதனையடைய நீ இச்சயிக்கவே வேண்டியதில்லை. இதுதான் கர்ம மார்க்கத்தின் முடிவு. ஒன்றையடைய வேண்டும் என்ற எண்ணம் எந்த க்ஷணத்தில் உன் மனத்தில் நிகழுகின்றதோ அப்பொழுதே உன்னுடைய வியாபக வடிவம் கண்டிதப்படுகின்றது. ஆதலின் உன்னுடைய ஸ்வாபாவிக வியாபக ஸ்வரூபமானது நிராசையால் தான் விளங்கும்; "ஆசையறுதலே வீட்டின்பம் (மோக்ஷாநந்தம்) நேரே யடையக் காரணமாகும்."

பாமரர்கள் பந்தபாசத்தைப் பெருக்கிச் கொள்வதில் மிகவும் சுறுசுறுப்பாய் இருக்கிறார்கள். அவர்கள், காணப்படும் பொருள்களின் தத்துவத்தை ஒரு நிமிஷமாயினும் விசாரிப்பதில்லை. ஏகாந்த மஹா மோனத்தில் விளங்கும் ஆத்மாநந்தத்தை அவர்கள் ஒருபோதும் அறியார்கள். ஸ்வாபாவிக ஆத்மாநந்தத்தினை அறியவேண்டுமாயின் ஸகல அத்தியாஸங்களுக்கும் அதீதமாய் நிற்கப் பழகவேண்டும். இந்நிலைதான் ஸகல மதங்களின் சத்துவமாகும். இந்நிலையில் நிற்பவரே பலவற்றுள் ஒன்றைப் பார்ப்பவராவார். அதாவது பேதத்தில் அபேதத்தையும், கர்மத்தில் அகர்மத்தையும் பார்ப்பவராவார்.

உலக நாட்டத்திலிருந்து திரும்பினால் தான் மரணத்தினின்றுந் தப்ப முடியும். மாயையை உனக்குள் லயப்படுத்தி, எவ்வளவு சிரமப்பட்டாயினும், அதற்கு அதீதமாய் நின்று அகண்ட அத்விதீய நிர்விகார ஸ்வரூப ஆத்ம ஞானத்தைப் பெறத் தைரியமாய் நிலைத்திரு. இதுதான் ஸம்யக்தரிசனத்திற்குச் சாதகமான அநுபவ முறை. இம்முறையில் பழகினால் தான் நீ பிழைத்தவனாவாய். அதாவது மரண பயத்தினின்றும் தப்பியவனாவாய். உன்னுடைய வாழ்க்கையானது ஸ்வபாவமாயிருப்பதுடன், அஞ்ஞானநித்திரையினால் தூங்கும் ஒவ்வொரு ஜீவனையும் எழுப்பும் வேதாந்த சூரிய ஞானப்பிரகாசத்தோடு கூடியதாயிருத்தல் வேண்டும். இத்தகைய ஜீவி

யத்தினுல் தான் உலகத்தின் ஒவ்வொரு மூலைக்கும் ஞானப் பிரகாசத்தைவியாபிக்கச் செய்ய முடியும். உன்னுடைய வாழ்க்கை ஆத்ம லாபத்தையே பரம புருஷார்த்தமாய்க் கருதி அதை அடைவதிலேயே முயல்க.

உன்னுடைய ஹிருதய குகையில் அடங்கிக் கிடக்கும் ஆத்மீயசக்தியை யெழுப்பு. ஆத்மசக்தி வெளிப்பட்ட அந்த க்ஷணத்திலேயே வேதாந்தகேஸரி கர்ஜிக்கும். இந்தக் கர்ஜனையால் அவித்தியாகாரிய நாமரூப நரிகள் தங்கள் இருப்பிடமாகிய வளைகளுக்குள் ஓடி மறைகின்றன; அப்பொழுது நீ நிர்விகார சுத்த ஸ்வயம் பிரகாசமாய் விளங்குவாய்.

நீ உன் மகிமையில் நின்று எல்லோரும் அறியும்படி ஆத்ம தத்துவத்தைப் பறையறைவாயாக. உன்னுடைய ஒவ்வொரு ரோமத் துவாரத்தினின்றும் வேதாந்ததத்துவம் வெளிப்படட்டும். ஸ்வபாவமாயுள்ள ஆத்ம தத்துவத்தை உலகமெங்கும் புநருத்தாரணஞ் செய். ஸர்வாதீத நிலையிற் சதா பழகு. இதனுல் வெளிப்படும் பிரஹ்மாநந்தமானது அஸத்து ஜடதுக்க ரூப உலக அழுக்கைச் சுத்தப்படுத்துவதுடன், பவரோகத்தையும் ஒழிக்கின்றது: சிற்ஜடக்கிரந்தியின் காரியமாய் மயக்கத்தால் தோன்றும் மித்தியாஜகத்து உன்னை மயக்காது. ஆதலின் உன்னுடைய வாழ்நாள் முழுமையும் அதீத நிஷ்டையையே மேலான நோக்கமெனக் கொண்டிருத்தல் வேண்டும். நீ முக்கரணங்களால் எதை நினைப்பினும், எதைப் பேசினும், எதைச்செய்யினும், ஆத்ம நாட்டத்திலேயே யிருப்பனுயிருக்க வேண்டும். இதுதான் வேதாந்த வாழ்க்கை. இத்தகைய வாழ்க்கையோடு கூடியவனுய் ஸமத்துவத்தை யடைந்து அகண்டமாய் விளங்கு. இங்ஙனம் விளங்கினுல்தான் மஹரிஷிகளின் சந்ததியிற் சேர்ந்தவன் நானென்று கூறிக்கொள்ளுதல் பயனுடையதாகும். நீ விசுவாச முடையவனுய் ஸதா உன்னிலேயே ரமித்து அபரோக்ஷஞானக் கொடியைக் கையில் பிடித்து உலகமறியக் காட்டுவாயாக. ஏகமாயும், அத்விதீயமாயும், அபயமாயும், நிர்விசேஷமாயும் விளங்கும் ஆத்ம ஸ்வரூபத்தை அதிகாரி

களாயுள்ள யாவரும் அறியக்கூடும். இதில் யாதொரு சந்தேக முமில்லை. ஆத்மாவை யறிந்தவன் ஸ்வராஜ்யத்தைப் பெற்ற வனேயாகும். ஆதலின் நீ நிர்விசேஷ சின்மாத்ர ஆத்ம ஸ்வரூபமாகவே விளங்குவாயாக.

இந்திரியங்களின் வழியே சென்று அவைகளால் மோசம் போகாதே. ஆத்மாநு ஸந்தானத்தில் உன் மனத்தைத் திருப்பு. நீ பரமேச்வரன் அவதாரமே. நீயே ஸர்வசக்திமா ணுகிய ஈச்வரன். கற்பிதயாகிய ஸகல துவந்துவங்களிணுலும் விகாரப்படாத சின்மாததிர ஸ்வரூபத்தைச் சந்தசம் பாவனை செய். உண்மை நோக்கில் நீ ஸகல நாமரூபப் பிரபஞ்ச பாசங் களினின்றும் விடுபட்டவனு யிருப்பதால், எப்பொழுதும் அசங்க சாக்ஷியயாய் விளங்கு. நீ உலகத்திற்குக் கீழ்ப்படிந்து விஷயங்களில் உன் மனதைச் செலுத்துவாயாணுல் அது உன்னைக் கெடுப்பது நிச்சயம். லோக வாஸனைதான் உன்னை மயக்கித் துன்பத்திற்கு ஆளாக்குவது. ஆதலின் ஜீவபாவத் திற்குக் காரணமாகிய "யான் எனது" என்னும் தேகவாஸனை லோக வாஸனைகளை நாசஞ்செய். வாஸனுக்ஷயத்தில் இந்த உலகமே சிவமாய் விளங்கும். ஒரு க்ஷணகாலம் நீ பிரஹ்மா காரப் படுவாயாகில் அது உன்னைப் பாவனமாக்கிச் சதா அந்தர் முகமாகவே யிருக்கச்செய்யும். ஆதலின் கற்பித ஜீவ பாவத்தை யொழித்து உண்மையான உன் ஆத்ம ஸ்வ ரூபத்தை அறிதல் வேண்டும். உன்னை நீ யறிக்தாயாகில் உனக்கு ஒரு கேடுமில்லை. இந்த உலகம் உன்னை மயக்காது; அன்றியும் நீ உன்னுடைய ஸ்வாபாவிக ஆத்மீய சக்தியையும் பரிசுத்தத்தையும் அடைந்து(விசாரிக்காதபோது அதிரமணீய மாய் விளங்கும்) மாயாவிலாஸ லௌகிக விருத்திகள் உன் மனத்தில் சற்றும் இல்லாதொழியச் செய்யவேண்டும். நீ எப் பொழுதும் பரப்பிரஹ்ம ஸ்வரூபத்தில் அமிழ்ந்து (அபேத மாய் விளங்கவேண்டும். இதுதான் ஜீவன் முத்திநிலை. இந்த நந்நிலையைப் பெற்றால் நாமரூபப் பிரபஞ்சக் கல்லானது பொடியாக்கப்பட்டு அதற்கு அதிஷ்டானமாயுள்ள ஸச்சிதா நந்த ஸ்வரூபம் அபரோக்ஷமாகும். இந்நிலை (நாமரூபப் பிர

பஞ்சத்தின்) அத்தியந்த நாசத்தாலும், (அஸ்திபாதி ப்ரிய வடிவ) அகண்டாகார விருத்தியிலும் விளங்குவதாகும். லௌகிக விஷய சுகங்களில் இச்சை வையாதே. ஈஷணாத்திரயங்களை எரித்துவிடு. உன்னுடைய உண்மையான அத்விதீய ஸத்தா ஸ்வரூபவிருத்தியேமனத்தில்குடிகொள்ளட்டும். ஸதா ஆத்ம ஸ்வரூபத்தில் மூழ்கி அவ்வடிவமாகவே நிலைத்திரு. இன்றேல் விஷயாதிவடிவ உலகமாகிய தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்படுவாய். அப்பொழுது நீ ஜீவனாகிறாய். உடனே நரகமாகிய சரீரம் கற்பிக்கப்படுகின்றது, இதனால் ஸகல அநர்த்தங்களும் ஏற்படுகின்றன. ஆதலின் ஜீவபாவத்தையும் சரீரத்தையும் ஞானாக்கினியால் சுட்டெரித்து நித்தியத்துவத்தில் கரைக்க வேண்டும். இங்ஙனம் செய்யின் உலக நாட்டமாகிய உமியும், தூசும் அழுக்கும் அறவே நீங்கும்.

அகண்ட ஆத்ம சக்தியினால் உன்னுடைய ஸச்சிதானந்த பூமா ஸ்வரூபம் அபரோக்ஷமாகும் போது உன் சரீரம்முழுதும் நடுங்கி என்பு நெக்குருகும். உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையில் ஒவ்வொரு உறுப்பும் ஸ்வேச்சா கீதம் பாடும். லௌகிக விஷய வாஸனைகள் உன் மனத்தைத் தீண்டமாட்டா. ஆதலின் நீ ஸகல அனர்த்தங்களினின்றும் நீங்கினவனாவாய். ஸ்வரூப ஆநந்தம் உன் முகத்தில் பிரகாசிக்கட்டும்; உபசாந்தம் உன் முகத்தில் குடிகொள்ளட்டும். இதுதான் நீ ஸத்(ஸ்வஸ்வரூபத்)தில்நிலைத்திருப்பதைக் காட்டுங்குறி. இதுவரையில் உன்னால் கற்பிக்கப்பட்டு உனை மூடியிருந்த திரிபுடியாகிற அஞ்ஞானாந்த காரமானது ஆத்ம பாஸ்கரன் முன் நிற்குமா? உன்னுடைய தூக்கம் ஒழியும்; துன்பங்கள் யாவும் நாசமாகும். ஆசைகள் அறும். நீ அகண்ட ஸ்வரூபமாய்ப் பேராநந்த வடிவமாவாய். அப்பொழுது நீ தேசகால வஸ்து பரிச்சேதமற்றவனாவாய். தானாகவே நிலைக்கும் சொர்க்கமாகிய நிலையினின்றும் கொஞ்சங்கூட நழுவமாட்டாய்.

புருஷார்த்தம் மரணமல்ல. பிரிவினையினாலும் பேத பாவத்தினாலும் ஏற்படுவது மரணமேயாம். ஆதலின் துவை

தப் பிராந்தியை நீக்கி, அபேத தரிசனரூப உண்மை ஞானத்தைக் கொள்க. பேதங்களில் ஸமத்துவத் (அபேதத்)தையும், நானுத்துவத்தில் ஏகத்துவத்தையும பார்ப்பதே சிறந்த உத்தேசமாய்க் கொள்க. லோகாயதமாகிய சேறு உன்மனத்தில் படிந்திருக்குமேயானுல் உனக்கு மரணம் நிச்சயம்; உன் உண்மையான (ஆத்ம) ஸ்வரூபத்தை யறியாவிட்டாலும், மாறுபாடா யறிந்தாலும், உனக்கு மரணம் சொந்தமே. சரீராதிகளில் தாதான்மியமும் அபிமானமுமே உன்னுடைய மரண காரணங்களாம். ஆதலின் நீ மரணத்தினின்றும் தப்பவேண்டுமானுல், மரணகாரணஙகளாயுள்ள தாதாத்மிய அபிமானங்கள் இறக்குமாறு செய்யவேண்டும். இவற்றின் மரணம் ஆத்மாபரோக்ஷத்தி ஞலேயே யாவதாகும். ஆத்மாவை அறிவதே சிறந்த புருஷார்த்தமாகும்; "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்று அறிவதே பரமபுருஷார்த்தம்; வியாவகாரிக நாமரூபப் பிரபஞ்ச அதிஷ்டான ஸத்தா ஸ்வரூபத்தை யறிவது தான் உன்னுடைய பெரும்பயனுகும். எல்லா மதங்களுக்கும் எதுமுடிவோ, அதுதான் நீ அடையவேண்டிய ஸ்தானமாகும். கேவலமாயும் அத்விதீயமாயுமுள்ள நிலேயே உனக்கு ஸ்வபாவமானது. எல்லாம் நீயே. இங்ஙனமிருப்பதை நன்குணர்ந்தால் உனக்குத் துன்பமென்பதே கிடையாது; ஆசாபிசாசு உன்னே அணுகாது; நீ பயமற்று விளங்குவாய். அபயவடிவமாவாய். விவகாரங்களாகிற மூடுபனி உன்னே மறைக்காது. (தத்துவ) ஜ்ஞானதீபம் ஸதா பிரகாசித்துக் கொண்டிருக்கும். பயகாரணமாகிற தேஹோஹம் பாவனே அத்தியந்தம் நாசமாய்விடும். உன்னுடைய வாழ்க்கையானது உலகத்திற் சிக்கித் துன்புறுமல் நீ பரிபூர்ணமாய் விளங்குவாய். எந்த நிலேயில் வேதாந்த சித்தாந்தமும் அபயஸ்வரூபமும் ஏகமாயும் அத்விதீயமாயும் உள்ள ஒன்றில் அபின்னமாய் விளங்குமோ, அது தான் முடிவானது. சுருங்கக்கூறின் ஸர்வாதாரமான ஆநந்தமே பரம புருஷார்த்த மோக்ஷமாம்.

உன்னே நீசனென்றும் பாவியென்றும் சொல்லிக்கொள்ளாதே. "யத்பாவம் தத்பவதி" நினேக்கும் வண்ணம் ஆகிறுன். "விதைக்கும் வண்ணம் அறுக்கிறுன்" என்னும்

பழமொழிப்படி ஒருவன் நினைப்புக்குத் தக்க பழக்கமும் பழக்கத்திற்குத் தக்க குணமும், குணத்திற்குத் தக்க தொழிலும், தொழிலுக்குத் தக்க வாஸனையும் ஏற்படுகின்றன. ஆதலால் உன்னை நீ இழிவுபடுத்தி நீசனென்றும் பாவியென்றும் நினைத்துக் கொள்வதனால் அங்ஙனமேயாகிறாய். உண்மையில் நீ தாழ்ந்தவனல்ல. எண்ணந்தான் ஒருவனைத் தாழ்த்துவதும் உயர்த்துவதுமாகும். உயர் குலத்திற் பிறந்த கர்ணனைத் தாழ்த்தியது அவன் எண்ணமேயன்றோ? ஆதலின் நீ எப்பொழுதும், உயர்ந்தவனாகவே கருதுவாயாக. ஆத்மாவைக் காட்டிலும் உயரிய பொருள் உலகத்தில் இல்லையாதலால் பிரஹ்மஸ்வரூபமாகிற ஆத்மாவே நானென்று பாவனை செய். செய்தால் அங்ஙனமாவது திண்ணம். ஒவ்வொருவனும் ஆநந்தத்தையே தேடுகிறான். ஆநந்தம் விஷயாதிகளில் இல்லை; மற்றோ அது ஆத்மவடிவமே. இந்த உண்மையை அறியாமல், எங்ஙனம் பசையற்ற எலும்பைக் கடிப்பதனால் வாய் அறுபட்டுத் தன் வாயினின்றும் பெருகும் இரத்தத்தைச் சுவைத்து நாய் சந்தோஷப் படுகின்றதோ, அங்ஙனமே ஜீவர்கள் விஷயாதிகளிலிருந்து ஆநந்தம் வருகின்றதென்று மயங்குகிறார்கள். உண்மையில் ஆநந்தம் பிரத்தியக் ஆத்மாவே. இங்ஙனம் அறியாமையே ஸகலபேதப் பிரதீதிக்கும், அதனால் ஸகல துன்பங்களுக்கும் காரணமாகின்றது. ஆதலால் தேஹோஹம் பாவனைசெய்து விஷயாநந்தச் சதுப்பு நிலத்திற் சிக்கிக் கொள்ளாமல் "சிவோஹம் பாவனை செய்து எங்குமாயும் எல்லாமாயும் என்றுமாயும் உள்ள உயரிய நிலையை அடைவாய். இந்நிலையை அடையச் செய்யும் மஹாமந்த்ரம் "ஹம்ஸ"மேயாம். இந்த "ஹம்ஸ" மந்திரத்தை இரவும் பகலும் ஜபித்தால் மனம் விஷயங்களிற் செல்லாவாறு அடங்கி ஒருமுகப்பட்டு ஆத்மாவை நாடும். "நானே அது" என்னும் பாவனை (தியானம்) முதிரமுதிர நீ அதுவேயாகிறாய்.

ஸகல பாஹ்யப் பிரவிருத்திகளையும் விட்டு ஆத்மாவிலேயே நிலைத்திரு. வெளியே விஷயாதிகளை நாடினால், அதனின்றும் திரும்பி உண்முகப்படுவது மிகவும் கஷ்டம். வெளி

விஷய ஈாட்டத்திற்குக் காரணமாகிய ஆசையை யொழித்த லன்றி துன்பம் ஒழியாது. விஷயாதிகளில் ஆநந்தம் உளதென் னும் பிரமையினுல் ஆசையும், அதனுல் பிரவிருத்தியும், அத ஞல் கருமமும், அதனுல் இருவினைகளும், அவற்றுல் சுகதுக்கங் களும், இவற்றின் அனுபவத்தின் முடிவில் மரணமும் உண் டாகின்றன. உண்மையில் ஆத்மா இறப்பதன்று. ஆத் மாவைக் கத்தி வெட்டாது. நெருப்பு எறிக்காது; ஜலம் நனைக்காது; காற்று உலர்த்தாது. கத்தி முதலியன வெட்டு வதாயும் எரிப்பதாயும், நனைப்பதாயும் நினைப்பது மயக்க உணர்வேயாகும். பஞ்சபூதங்களும் உன்னிடத்தில் கற்பனை யால் விளங்குகின்றன. நீ அவற்றிற்கு ஆதாரமாயிருக்கிருய். அத்தியாஸமாயுள்ள அவற்றிற்கு ஸத்தையைக் கொடுப்பவன் அதிஷ்டானமான நீயே. அத்தியாஸ கற்பனையின்றேல் அநர்த்தங்கள் இல்லை; மரணமும் இல்லை. திரிபுடி கற்பனை யுள்ளபோது நீ ஜீவனுகிருய். ஜீவபாவ மற்ற காலத்தில் திரி புடித்தோற்றமில்லை; ஸகல அநர்த்தங்களுமில்லை. நீயே பிரஹ்மமாய் விளங்குவாய். இதுதான் ஞான பராக்கிரமம்.

நீ பிரஹ்மத்தை யறிந்து பிரஹ்மமேயானுல் சூரியன் முதலிய கிரகங்கள் உன்னுடைய தயவை எதிர்பார்த்து உன்னை வணங்கும். துக்க ரூபமான உலகம் உன் வசமாய் நின்று ஆநந்தமாய் விளங்கும். சச்சிதாநந்த நாட்டத்தில் நாமரூப வடிவ உலகம் நாசமாகின்றது. நிர்விசேஷ பிரஹ்ம ஸாக்ஷாத்கார த்தில் (காணப்படும்) இந்த உலகம், நாசமாதற் குத் தயாராயிருக்கும் ஒரு அணுவாயிருக்கும். ஸங்கத்துவ தோஷத்தினுல் இந்த உலகம் அத்தியசிக்கப்பட்டிருக்கின்றது. உலகத்தோடு சம்பந்தப்பட்டவனென்று நீ கருதினுல் நிர் விசேஷ சின்மாத்ரத்தை அறியமாட்டாய். நிர்விசேஷமாயும் அஸங்கமாயுமுள்ள சச்சிதாநந்தத்தை யறிந்தால்தான் நீ பிழை பாய். நாமரூப உலக எண்ணங்களுக்கு மனத்தில் இடங் தரா தே. ஸகல லௌகிக வாஸனைகளுமற்று மனம் நாச மாகும் வரை நீ ஸமாதியை அப்பியசித்தல் வேண்டும். இந்த உலகத்தை நரகத் துவாரமாயிருக்கச் செய்யக் கூடா தென்பதை ஒருகாலும் மறவாதே. எப்பொழுதும், நீ நாம ரூப உலகத்தில், நிர்விகார ஸத்ஸ்வரூபத்தைப் பார்த்தல்

வேண்டும். சஞ்சலத்தில் அசலமாயும், சரீராதிகளில் அசரீரியாயும் உள்ள இந்த பாரமார்த்திக ஸத்ஸ்வரூபத்திலிருந்துதான் ஸகல நாமரூபப் பொருள்களும் தோற்றுகின்றன. இந்த பராஸத்தையை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டனவேயாகும். இங்ஙனம் செய்யின் சலனவடிவமாயுள்ள உலகமே உன் மனத்தில் தோற்றுது. அப்பொழுது நீ மாத்திரம் தானேதானுப் சிதாகாசத்தில் ஆநந்த தாண்டவஞ் செய்வாய்.

முதலில் "நானே அது ; நானே அது" வென்று பலாத்காரமாய் ஜெபிக்கப்பழகு ; காலக்கிரமத்தல் அது பழக்கமாய் விடும். பின்னர் ஒருமுகப்பட்ட சுத்த மனத்துடன் அநுஸந்தானஞ் செய். பிரஹ்மாநுஸந்தான முதிர்ச்சியினுல் அகண்டாகார விருத்தியும் ஒழிந்து நிர்விகல்ப ஸ்திதியை யடைந்து இத்தகையதென்று சொல்ல முடியாத நிலையில் விளங்குவாய். ஆதலின் இந்த பரமோத்கிருஷ்டமான நிலையை யடையச் செய்யும் "ஹம்ஸ" மந்திரத்தைப் பக்தி சிரத்தையுடன் ஜெபிப்பாயாக. காதின் மூலமாய் ஹருதயத்திற்குச் சென்று ஹிருதயக்கிரந்தி அறுபடும் வரை, வேதாந்த சிரவணஞ் செய்க. "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் சிதையாத சித்தாந்தமாகிய உண்மையை உன்னுடைய சரீரத்துள்ள ஒவ்வொரு ரோமத்துவாரமும் ரக்த பிந்துவும், நரம்புகளும். வெளிப்படுத்துக. அதாவது ஞானிகளின் சரீரம் எப்படி விளங்குமோ அப்படி விளங்கட்டும் என்பது கருத்து. இந்த உயர்ந்த தத்துவத்திற்கேற்ற செயலும் வார்த்தையும் உன்னிடத்தில் விளங்கட்டும். சிவோஹம் பாவனையில் ஜீவபாவம் கரைந்து விடுகின்றது. இந்த அநுஸந்தானமே மாயையின் இந்திரஜால இருளை யொழிக்கும் பேரொளியாம். உன்னுடைய வாழ்க்கை இந்த உண்மையோடு கூடி விளங்குக- பிரஹ்மஸ்வரூப ஆத்மாவைப் பிரத்தியக்ஷமாய் அறிக. ஆத்மாவை அறிதல் சமாதியில்தான் கூடும். இந்த ஸமாதியே ஸச்சிதாநந்த விளக்கம் அல்லது ஆத்ம பிரத்தியக்ஷமாம்.

ஓம் தத்ஸத், சிவம்

சாந்திః

---

## விளம்பரம்.

---

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஸச்சிதாநந்த விளக்கம் (ஆங்கிலம்) ... | 0 | 2 | 0 |
| 2. | சங்கர விஜய ஸாரசங்கிரகம் ... | 0 | 2 | 0 |
| 3. | ஸ்ரீ மநீஷா பஞ்சகம் ... | 0 | 5 | 0 |
| 4. | ஸ்ரீ நடராஜ தத்துவம் ... | 0 | 8 | 0 |
| 5. | ஸூதஸம்ஹிதாஸாரம் 1-பாகம் ... | 1 | 0 | 0 |

மேற்கண்ட புத்தகங்கள்
கீழ்க்கண்ட சங்கத்தில் பெற்றுக் கோள்ளலாம்

பிரஹ்மாநந்தாம்ருதவர்ஷிணி:-- இஃதோர் ஸம்ஸ்கிருத நூல் நாகர எழுத்தில் உள்ளது. வேண்டுபவர்கள் ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். மனனத்திற்கு மிகச் சிறந்ததாகும்.

ஸச்சிதாநந்த சங்கம்,
நெ. 19 பங்காரு நாய்க்கன் தெரு,
மவுண்ட் ரோட், மதராஸ்.

---

PRINTED AT THE NOBLE PRESS, MADRAS, S. E.